கனம் திரு. எஸ். எம். ஏ. மஜீத் : செயல்படாமல் இருக்கவில்லை. எற்கனவே முனிசிபாலிடிகளிலிருந்து ரிபோர்ட் அனுப்பப்பட்டிருக்கிறது. கரஸ்பாண்டன்சில் தாமதமாகிறது. சீக்கிரமாக துரிதப்படுத்த முயற்சிக்கிறோம்.

MR. CHAIRMAN : Questions are over.

[*Note.*—An asterisk (*) at the commencement of a speech indicats revision by the Member..]

## II. ANNOUNCEMENTS.

### (1) MESSAGES FROM THE ASSEMBLY.

MR. CHAIRMAN : I have received a message from the Hon. Speaker, Madras Legislative Assembly, transmitting a copy of the Madras Payment of Salaries and Removal of Disqualifications (Amendment) Bill, 1962 (L.A. Bill No. 15 of 1962), as passed by the Assembly on the 29th October 1962 for the recommendation of the Council and certifying that the Bill is a Money Bill within the meaning of Article 199 of the Constitution of India.

I have also received a message from the Hon. Speaker, Madras Legislative Assembly, transmitting a copy of the Madras Industrial Establishments (National and Festival Holidays) Amendment Bill, 1962 (L.A. Bill No. 17 of 1962) as passed by the Assembly on the 31st October 1962 for the concurrence of the Council.

### (2) MESSAGE FROM THE GOVERNOR.

MR. CHAIRMAN : I have also received a message from the Governor of Madras recommending to the Legislative Council the consideration of the Madras Payment of Salaries and Removal of Disqualifications (Amendment) Bill, 1962.

## III.—CALLING ATTENTION TO THE RESIGNATION OF THE MEMBERS OF THE KANYAMBADI PANCHAYAT.

* டாக்டர் அ. சிதம்பரநாதன் : தலைவர் அவர்களே, நம்முடைய மன்றத்தின் விதிகளில், 42-ஆவது (1) விதியின் கீழே நான் இந்தக் கவன ஈர்ப்புத் தீர்மானத்தைக் கொண்டு வருகிறேன். வட ஆர்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்த கண்ணியம்பாடி பஞ்சாயத்து போர்டு உறுப்பினர்களெல்லாம் அண்மையில் ஏகமனதாக தங்களுடைய பதவிகளிலிருந்து விடுதலை பெற்றிருக்கிறார்கள். அவர்கள் ராஜீனாமா செய்ததற்குக் காரணம் என்று பத்திரிகைகள் வாயிலாக அறிவிப்பு வந்தது உண்மையானால் உயர்தரப் பள்ளிக்கூடம் தங்கள் ஊரிலே நிறுவப்படவேண்டும் என்று கேட்டதை அரசாங்கம் ஒத்துக் கொள்ளாததே காரணம் என்று தோன்றுகிறது. அதைப்பற்றி அறிவதற்காகவே இந்த கவன ஈர்ப்புத் தீர்மானம்.